[5th July 1962

**கூட்டுப் பட்டா முறை**

* 130 கேள்வி.—திரு. சா. கணேசன் : கனம் பொதுப் பணித் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஜமீன்தாரி காலத்தில் சிறு நில உடைமையாளர்களான விவசாயிகட்குத் தனித்தனியே பட்டா வழங்கியிருந்ததை மாற்றி ஜமீன் ஒழிப்புக்குப் பின்னர், கூட்டுப் பட்டா முறையை அரசாங்கம் அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறதா ?

(இ) கூட்டுப்பட்டா முறையால் குறிப்பிட்ட ஒருவர் வரி செலுத்தாமையாலே அப் பட்டாவில் உள்ள யாவருடைய நிலமும் வரிப் பாக்கிக்காக ஏலத்திற்குக் கொண்டுவரப்படுவது உண்மையா ?

(உ) இந்தக் குறையை நீக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI V. RAMAIAH : (அ) No, Sir.

(இ) In the case of joint pattas, even when one of the pattadars has defaulted, the holding as a whole is liable to answer the demand as each one of the joint pattadar has his undivided right over the entire holding. But while selling the land of a defaulter in discharge of arrears of revenue, only such portion of the holding is brought to sale as would be sufficient to discharge the arrears actually outstanding.

(உ) The ryots are permitted to have their portions sub-divided as per enjoyment on ground and to obtain independent pattas.

திரு. சா. கணேசன் : ஏற்கெனவே தனிப் பட்டாவாக இருந்தும் பல பட்டாக்கள், குறிப்பாக இராமநாதபுரம் ஜில்லாவில், ஒன்ருக இருக்கிறது. ஆனல் அப்படி இல்லை என்று சொன்னர். எங்கள் பகுதியில் அப்படி சேர்க்கப்பட்டிருக்கிறது. அது அரசாங்கத்தினுடைய கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

கனம் திரு. வி. ராமையா : என்னுடைய கவனத்திற்கு வரவில்லை. ஆனல் கனம் அங்கத்தினர் இதைப்பற்றி தனியாக கேள்வி போட்டு என்னுடைய கவனத்திற்குக் கொண்டுவந்தால் அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்க முடியும்.

திரு. ஜே. மாதா கவுடர் : கூட்டு பட்டா வைத்துக்கொண்டிருந்தால் அதனல் பல சிக்கல்கள் ஏற்படுகின்றன. ஒவ்வொருவருக்கும் இவ்வளவு ஏக்கர் இருக்கிறது என்று இருந்தால் நலமாக இருக்கும். அப்படி இல்லாமல் இருப்பதால் பல சிக்கல்கள் ஏற்படுகின்றன. அதனல் கூட்டுப் பட்டாவில் ஒவ்வொருவருக்கும் எவ்வளவு ஏக்கர் நிலம் இருக்கிறது என்பதை கிராம கணக்குகளில் நிர்ணயிக்கும் படியாக கிராம முன்சீப், கணக்குப் பிள்ளைகளுக்கு உத்தரவு போடுவார்களா ?

5th July 1962]

**கனம் திரு. வி. ராமைய்யா :** கனம் அங்கத்தினர் சொல்லுகிற படி உத்தரவு போட முடியாது. ஆனால் தனிப்பட்ட பட்டா வேண்டும் என்று கேட்டால் அதைப் பரிசீலனை செய்து அதற்கு வேண்டிய தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளும்படி சொல்லப் பட்டிருக்கிறது. அதன்படி அதிகாரிகளும் நடவடிக்கை எடுத்துக் கொண்டுவருகிறார்கள்.

SRI C. CHIRANJEEVULU NAIDU : Sir, in the taken-over estates where initial survey was not conducted and proper records were not available, the survey and settlement party could not come to a proper decision. When pattas were issued, certain defects are found out and they could not be rectified. Therefore, will the Government consider the desirability of deputing special staff to rectify such defects?

THE HON. SRI V. RAMAIAH : I have not come across such difficulties. But if the hon. Member brings to my notice specific instances which he has come across, I assure him that I will look into them.

**திரு. மா. இராசாங்கம் :** கூட்டுப் பட்டாவாக இருப்பவர்கள் நில அடமான பாங்குகள்மூலமாக கடன் தொகை பெறமுடியுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. வி. ராமைய்யா :** கூட்டுப் பட்டா சம்பந்தப்பட்ட வரை நில அடமான பாங்குகளில் கடன் வாங்குவது கஷ்டம்தான். அதனால் தனிப் பட்டா வேண்டும் என்று கோரிக்கை வந்தால் அதைக் கொடுக்க எந்த விதமான ஆட்சேபனையும் இல்லை. கொடுக்கும்படியாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

**திரு. கி. இரா. சம்பந்தம் :** கனம் சபாநாயகர் அவர்களே, 'சாகுபடி செய்யப்படும் சர்வே நம்பரை அடங்கலில் எழுதுவது சம்பந்தமாக சரியான உத்திரவு இப்பொழுது கொடுக்கப்பட வில்லை' என்று கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொன்னார்கள். இப்பொழுது தஞ்சை ஜில்லாவில் தஞ்சாவூர் பண்ணையாள் பாது காப்புச் சட்டப்படி, 'இன்னார் இவ்வளவு நிலம் சாகுபடி செய் கிறார்கள்' என்று அடங்கலில் குறிப்பிடுகிறார்கள். அதேபோல், கூட்டுப் பட்டாவாக இருக்கிற இடத்திலே, 'எந்த எந்த சர்வே நம்பரை எந்த எந்த விவசாயிகள் சாகுபடி செய்கிறார்கள்' என்று அடங்கலில் கணக்கு எழுதுவார்களானால், அதன்பிறகு தனிப் பட்டா வேண்டுமென்றாலும் சுலபமாகக் கொடுப்பதற்கு சௌகரிய மாக இருக்கும். இதை கனம் அமைச்சர் அவர்கள் கவனிப்பாரா ?

**கனம் திரு. வி. ராமைய்யா :** கனம் அங்கத்தினர் அவர்கள் கருதுவதைப்போல் இதிலே பெரிய சிக்கல் ஒன்றும் இல்லை. தனித் தனிப் பட்டா வேண்டுமென்று யார் கோரிக்கை மனு கொடுக்கிறார்களோ அதை அதிகாரிகள் பார்த்து, பட்டாவைப் பிரித்துக் கொடுத்துக்கொண்டுதான் இருக்கிறார்கள். ஆகையால், தனியாகக் கோரக்கூடிய விவசாயிகளுக்கே இதை விட்டுவிடலாம்.